உ

கணபதி துணை.

வேல்மயிலுந்துணை.

# திருவருணைக்கலம்பகம்

## மூலபாடம்

இஃது.

சைவ.

**எல்லப்பநாவலரால்**

அருளிச்செயப்பட்டது.

இஃது.

ஆரணி.

**சூடாமணிசிங்-அவர்கள்**

கேட்டுக்கொண்டபடி.

தொ-கந்தப்பமுதலியாரவர்களால்

பு-சின்னையாமுதலியாரவர்களது

தமிழ்வேதவிளக்கவச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

பிரமாதீச ௵ ஆடி ௴ இதன்விலை- அணா, அ.



1854



கோட்டு- இரங்கநாதமுதலியார்
வீதிக்கு - மேலண்டை வீதியில்-
௰௬- வது- நெம்பர்வீட்டில் இந்
தப்புத்தகம்- விற்கப்படும்.



உ கணபதிதுணை.

வேலுமயிலுந்துணை.

# திருவருணைக்கலம்பகம்

## மூலபாடம்.

காப்பு.



(நேரிசைவெண்பா.)

அன்னவயல் சூழருணை யண்ணாமலை யார்மேன் ...................... *
மன்னுங் கலம்பகப்பா மாலைக்குத்- துன்னியசீர் .................. *
மெய்க்கோட்டு மேருவெனும் வெள்ளேட்டின் மீதெழுதுங் ...... *
கைக்கோட்டு வாரணமே காப்பு ........................................... *

(கட்டளைக்கலித்துறை.)

சைவத்தின்மேற்சமயம் வேறிலையதிற்சார்சிவமாந் ................. *
தெய்வத்தின்மேற்றெய்வ மில்லெனு நான்மறைச் செம்பொருள்வாய் *
மைவைத்த சீர்த்திருத் தேவாரமுந்திரு வாசகமு ..................... *
முய்வைத்தரச்செய்த நால்வர்பொற்றாளெம் முயிர்த்துணையே ........ *

(மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.)

| | | |
|---|---|---|
| மணிகொண்ட நெடுங்கடலில் விழிவளரு மாதவனு ............ * | தரவு. | ஒத்தாழிசை |
| மணிகொண்ட புண்டரிக மகலாத சதுமுகனு ................ * | | |
| ஞானக்கண் ணதுகொண்டு நாடுமா றுணராதே .............. * | | |
| ஏனத்தின் வடிவாகி யெகினத்தின் வடிவாகி ................. * | | |
| அடிதேடி யறிவலென வவனியெலா முழுதிடந்து ............ * | | |
| முடிதேடி வருவலென மூதண்ட மிசைப்பறந்தும் ............ * | | |
| காணரிய வொருபொருளாக் களங்கமற விளங்குபெரும் ...... * | | |
| சோணகிரி யெனநிறைந்த சுடரொளியாய் நின்றருள்வோய் ... * | | |

(இவை—ஈரடித்தாழிசை—ஏழு.)

மலைமிசையி லிருப்பதற்கோ மலைசிலையா வெடுப்பதற்கோ * ௧.
மலையரையன் மகிழ்வதற்கோ மலையுருவ மெடுத்தனையே. *

இத்தலத்தி லைந்தொழிலு மிருபிறப்போ ரறுதொழிலுந் * ௨.
தத்துவமுந் திருமேனி தரித்திலையே வியலாவே. *

இருக்காதி சதுர்வேத மிசைப்பதுநின் பலபேத * ௩.
மொருக்காலு மொன்றுரைத்த தொன்றுரைப்ப வறியாதே. *

சாருமுடிவைத் தருகால கற்பமெலாங் கடக்கவுநின் * ௪.
திருமுடியிற் பிறைசிறிதுந் தேயாது வளராதே. *

தானவரைக் கடிந்துமலர்ச் சதுமுகனை யொழித்துமற்றை * ௫.
வானவரை யழித்துநின்கை மழுப்படைவாய் மழுங்காதே. *

அண்டருக்கு முனிவருக்கு மழலான கொடுவிடத்தைக் * ௬.
கண்டமட்டு நுகர்ந்திடவுங் கண்டமட்டிற் கடவாதே. *

மூவாமை தனக்குநின்றன் முதனடுவீ றிலாதமைக்குஞ் * ௭.
சாவாமை பிறவாமை தனக்குமிவை சான்றன்றே. *

தடவரை நடைகெழு தரமென வருமொரு.. *
கடகரி யுரிவிரி கலையென மருவினை... ......... *
படமுடை யரவொடு பகைபடு மடுபதி....... *
தடையற வுடனுறை சடைநெடு முடியினை..... *

இவை நாற்சீரோரடியிரண்டு சொண்ட அம்போதரங்கம்—இரண்டு.

சிலையென மலையை வளைத்தனை... ... ... ... ...*
திரிபுர மெரிய நகைத்தனை... ... ... ... ...*
கலைமறை யிவுளி படைத்தனை ... ... ... ... ...*
கதிரவ னெயிறு புடைத்தனை ... ... ...... ......*

இவை முச்சீரோரடி அம்போதரங்கம் நான்கு.

விதிசிரத்தினை, அகம்கரத்தினை......... ...... ......*
விடைநடத்தினை, பொதுநடத்தினை ..........*
நதிதரித்தனை, மதிபரித்தனை.. ......... ...........*
நாள்களாயினை, கோள்களாயினை........ ......... *

இவை இருசீரோரடி அம்போதரங்கம் எட்டு.

பண்ணுநீசுவையுநீ பரிதியுநீபனிக்கதிர்நீ......... * } க.
பெண்ணுநீயாணுநீ பேசமுநீடபேசமுநீ........ * }
செங்காலிற்கருங்காலன் சிரமுருளவுதைத்தனையே * } உ.
சங்காழிமுகுந்தனுக்குச் சங்காழி கொடுத்தனையே * }
அராவுமளவிடுதற் கரியவனை யொருகாத்து........ * } ௩.
நீராவுமலராவு நெஞ்சுருகப்பணலாமே...... * }

இவை பெயர்த்தும் ஈரடித்தாழிசை மூன்று.

எனவாங்கு—... ... ... ...... ... ... (இது—தனிச்சொல்.)

வேற்றுமருந்தால் விடாதவெம் பிறவியை ... ....... *
மாற்றுமருந்தா மலைமேன் மருந்தா.. ............... *
அழகிய நாடகி யருளுடை நாயகி... ...... ...... ..... *
புழுகணி நாயகி பொருந்திய புனிதா ... ... ... ...... *
காசியி லிறந்துங் கமலையிற் பிறந்தும் ... ... ... ... ... *
தேசமர் தில்லையுட் டிருநடங் கண்டும்... ... ... ... ... *
அரிதினிற் பெறும்பே றனைத்தையு மொருகாற்...... *
கருதினர்க் களிக்குங் கருணையை விரும்பி... ...... ... ... *
அடைக்கலம் புகுந்தன னடியேன்... ... ... ... ... ... *
இடர்க்கடல் புகுதா தெடுத்தரு ளெனவே.............. (௧)

இது பத்தடி நேரிசை யாசிரியச் சுரிதகம்.

(நேரிசைவெண்பா.)

வேதநுவல் சோணகிரி வித்தகர்க்கார் வேறுவார்... ... ... ...... ...... ... ... *
சோதியிய மானனிவர் சோமனிவ–ராதவனும்... ..... ... ... ......... ...... *
மண்ணுங்கா லும்புனலும் வானுமழ லுமிவர்...... ...... ...... ... ... ... *
எண்ணுங்கா லெல்லா மிவர் ... ........ ... ... ...... .............. (௨)

(கட்டளைக்கலித்துறை.)

எல்லா வுயிர்க்கு முயிரரு ணேச ரிவரசைவின்... ...... ...... ... .. ... ... *
அல்லா தணுவு மசையாத தென்ப தறிந்தனமே......... ... ......... ... ... *
வில்லாடன் மார னிருக்கவும் யோகம் விளைத்த வந்நாள்...... ... ...... *
புல்லா திருந்தன வெல்லா வுயிருந்தம் போகத்தையே ..... ...... ...... (௩)

(கலித்துறை.)

போகம் விடுத்தே தாக மெடுத்தே புவிமீதே.. .................. ...... *
யோகம் விளைத்தே யாக மிளைத்தே யுழல்வீர்காள்......... ............ *
ஆகமவித்தார் மோக மவித்தா ரருணேசர்........ ...... ...... ... ... ...... *
கோக னகத்தா ளாக நினைத்தே குழைவீரோ.. .. ... .......... ... .. ... ... (௪)

(அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

குழையடுத்த விழியிடத்தர் மழுவலத்த ரருணையத்தர் குளிர்வெற்பூடே *

மழையடுத்த துளிநனைக்க மடிசுருக்கி மயிர்பொடித்து வருந்துஞ் சேதா
தழையடுத்த விடையர்பற்று குழலிசைக்கு மனமுருக்கித் தளருமாலை .. *
பிழையடுத்த மொழியுரைத்த தலைவருக்குமிசவிரக்கம் பிறப்பியாதே (௫)

(எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

யாதவர் குலத்துநெடு மாதவன் மருப்புடைய வேணமிரு கத்துருவமா *
வேதமொழிபெற்றவயலேஓதிமமெனப்பறவைவேடமுமெடுத்த திலையோ
ஓதருணை வித்தகனை மூவரி லொருத்தனென வோதியிடு மற்பமதியீர் ... *
சீதமதி வைத்தமுடி பாதமல ரைச்சிறிது தேடுதனி லைத்தபரமே...... (௬)

(எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

பாவையாடினு நதிகளாடினும் படிவெலாநடந் தடிகடேயினும்...... *
குரவராயினுங் கனவினின்றதன் கொதிபொறுக்கினுங் கதிகிடைக்குமோ *
அரவமாடுசெஞ் சடிலரங்கணு ரமுதர்தாணிணைத் தடியர்தம்மொடு..... *
விரவிநீறணிந் தருணைசேர்வரேல் வெற்றராயினு முத்தராவரே......(௭)

(பதின்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

முத்தமிழ் முறைமுறை யன்பொடு மப்பர்கவுணியர் சொல்சுந்தரர் - முப்
பொழுது மெதிர்புகழ்ந்திடு- முதுநூலார், அத்தரருணையி னெடுந்திரை
தத்துதிருநதியின் மென்பெடை யச்சமற வுடனினைந்துறை-மடநாராய்,
ஒத்தமனமொடு புணர்ந்தவர் சற்றுமகல்வதிலையென் றவருற்றதுணையென
விருந்தவருளம்வேறாய், எத்தனைகபட நினைந்தவர் கைப்பொருள்கருதிநட
ந்தனரெப்படி யிறைவனை நம்புவ- தினநாமே ..... .......... ..........(௮)

(அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

இனமகலுமருகர்மட மிசையிலிடுகனன்மதுரை யிறைவனுடல்புகமொழி
கனகமுகபடகவள கரடதடவிகடமத கரியின்மதமறநினைவரோ ..... [வரோ
வனமருவுமருமுதலை யொருமதலைதரவினிய மதுரகவிமொழி முதல்வரோ
அனகரபினயரதுல ரமலரெமதருணைகிரி யடிகடமதடியவர்களே......(௯)

(தலைவன்வினவுதல்- எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

அடியவர் சிந்தையி லினிதுறை சங்கர ரருணைவ ளம்பதி யன்றோ...... *
படியினெடுங்கரி யனையமதங்கொடு பதறிநடந்திடு மின்றோ [தோ
ஒடியுமருங்கென வுணர்கிலிர் நின்றினி யொருவசனஞ்சொல வொண்ணு
கடியசரங்களி னிளைஞருடன்பல கலகவிதம்பயில் கண்றோ ... ... (௰)

(அம்மானை மடக்குத்தாழிசை.)

நாராயணனறியா ராதாருணேசருக்கு........ ........ ........ ........ *
வாராச்சிலைக்கலைமெய் மாதங்கமம்மானை ........ ..... ........ ........ *

வாரார்சிலைகலைமெய் மாதங்கமாமாயின் ... ... ... ... ... ... *
ஆராயுங்காலெடுப்ப தையமன்றோ வம்மானை ... ... ... ... *
அன்னமறியாமெடுப்ப தையமோவம்மானை ... ... ... ... (௰௪)

(பாங்கிதலைவிக்குரைத்தல்—அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்)

மானென்பார்கலையென்பார்கைம்மலையென்பார்வழியேதென்பார் ... *
ஏனென்பாரிலையென்பார்யானேந்துமாந்தழைநன்றென்பார் ... *
ஊனென்பார்நிறையுந்தாராருறையுந்தென்னருணைமானே ... *
காமனென்பார்குழலைவேந்தர்கருத்தென்னோகருதுங்காலே ... (௰௫)

(புயவகுப்பு—ஆசிரியவண்ண விருத்தம்.)

கருணைமுகமண்டலத்தொளிர்மகரகுண்டலக் ... ... *
கலன்மலிகவின்குழைக்—குறவாயிசைந்தன ... ... *
களபமகில்குங்குமத்தளறுகுடிகொண்டுகட் ... ... *
டியபுழுகணைந்துமெய்ப்—பனிநீர்துளைந்தன ... ... *
கலைமதிமழுங்கிநத்தினமிருளடைந்துமுத் ... ... *
தொளிகருகவெண்சுதைத்—திருநீறணிந்தன ... ... *
கனவிகையரிந்துகட்பரிதிவையமுண்டுதக் ... ... *
கனைமுடிதடிந்துமைத்—தலையேவழங்கின ... ... *

இது முதலடி.

இரணியனுரங்கிழித்தளவறுமதங்கொழித் ... ... *
தெழுநரமடங்கலைத்—தடமார்பிடந்தன ... ... *
இமயமடமங்கைபொற்புளகவிருகொங்கையிற் ... ... *
சுவடுபடவின்பமுற்—றதிவேலகுழைந்தன ... ... *
இரவிகிரணங்கொழித்ததிசயமுடன்கிளைத் ... ... *
தெழுபவளவன்பொருப்—பெனவேவளர்ந்தன ... ... *
இதழியரவிந்தமுற்பலமகிழ்செருந்திகட் ... ... *
குரவலரிசண்பகத்—தொடையாணிறைந்தன ... ... *

இது இரண்டாமடி.

தரியலர்புரங்கெடச்சுரர்நரர்பயங்கெடத் ... ... *
தமனியநெடுஞ்சிலைச்—சிலைநாணெறிந்தன ... ... *
தனுவலதநஞ்செயற்கமர்பொருசரந்தரச் ... ... *
சாதமெனவந்துமற்—பொருபோர்புரிந்தன ... ... *
சலசமலர்மண்டபச்சதுமுகவயன்றிருத் ... ... *
தலையுடனிலங்குமுத—தலைவேலுவந்தன ... ... *
தடவிகடகும்பமதத்தகதவளதந்தநற் ... ... *
றறுகண்மதகுஞ்சரத்—துரிபோர்வைகொண்டன ... ... *

இது மூன்றாமடி.

அருணகிரணங்களிற்பலமணிநெருங்கிநச்... ... ... ... ... *
சரவமிளிர்கங்கணப்-பணிபாண்மலிந்தன ... ... ... ... *
அனவரதமம்பலத்தினிடமிடுந்தொழிற்...... ...... ...... *
கயினயவிதங்கள்பெற்-றழகோடிருந்தன ... ... ...... * இது
அருமறைதெரிந்தசொற்புகலியிறைசெந்தமிழ்க்...... ... * நான்கா
கரசினொடுசுந்தரப்-பெருமாள்புகழ்ந்தன... ... ... ... * மடி.
அரிபிரமர்தங்களுக்கரியபதபங்கயத்... ...... ...... ... ... *
தருணையதிருங்கழற்-பெருமான்புயங்களே... ... ..... (௰௩)

(தலைவனைவேண்டல்-மடக்கு- எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்)

புயந்தழுவுங்கண்ணியுஞ்செவ்விதழியேமால் ... ... ... ... ... ... *
பூண்டகயற்கண்ணியுஞ்செவ்விதழியேமால் ... ... ... ... ... ... *
வியந்துசொலினன்னதும்பொன்னிறமேயெங்கள் ... ... ... ... ... *
மின்னிறமும்பொன்னிறமேபுயம்பெறுமல் ...... ...... ... ... ... *
அயர்ந்திவள்வாடத்தகுமோவருட்கண்பாரீர் ... .. .. ... ... ... ... *
அருணகிரிப்பெரியீரோயமலரோநல் ...... ... ... ... ... ... .. ... *
வயந்தவிழாவழகரோநினைக்குமுத்தி ... ... ... ... ... ... ... ... ... ... *
வரந்தருவாரோமலைமேன்மருந்தனரோ ... ... ... ... ... ..... (௰௪)

(இரங்கல்-எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்)

மலைமேன்மருந்தருணேசரன்றுவலைவீசிநின்றவலையே.................*
அலைமேனிறைந்துவருமீனருந்தியருகேயிடங்கொள்குருகே... ..........*
முலைமேன்முயங்குதலைநாளிலன்பர்மொழிசூண்மறந்தபிழையோ..... *
தலைமேல்வனைந்தபடியோவிருந்துதமியேன்வருந்துதகவே.. ...... .. (௰௫)

(தலைவியைப்புகழ்தல்-எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்)

தகனமுறுவலின்மதனைமுனிபவர்சடையிலணிபலதலையினர்... ...... .. ......*
அகனலடியரோடுறையுமிறையவரருணைவளநகரிலைவயார்...... ..........*
நிகரிறனதடவமுதநிறைகுடநிலவுமுகபடம்விலகினற் ......... ...... .. ......*
ககனவமரருநரருமிகல்கொடுகலகமிடுவரிவ்வுலகிலே.................. (௰௬)

(இதுவுமது-மடக்கு-எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்)

உலககண்டகனுய்வருசலந்தரனுருடறடிந்திடுவார்கடல்விடங்கொளுவார். *
குலவுசங்கரனாருணையங்கிரிசூழ்குளிர்புனந்தனிலைகிளிகடிந்திடுவார் ... *
மலர்முகஞ்சசியே வடிவமுஞ்சசியே மகரமென்குழையே வருணமென்கு
ழையே-முலையுமந்தரமே யிடையுமந்தரமே மொழியுமாசுகமே விழியு
மாசுகமே ... ... ... ... ... ... ... ... ... (௰௭)

(தலைவியைக்கொண்டகறல்- எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

சுகமேசுகமேயிரும்வந்துபுனஞ்சூழ்கின்றவுமைத்தினமித்தினையுட். ...... *
புகமேயவிடாதுகடிந்திடுமெம்பொல்லாமையுமின்றுபொறுத்திடுமின் *
மீகமேருநெடுஞ்சிலையாளரணுமலையாரருணைபுரிமால்வரைமேல்......... *
அகமேசெலுமாறுதுணிந்திதண்விட்டகறுன்பமுமன்பர்வரிற்சொலுமே

(இரங்கல்-அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்) [௰அ]

சொல்லாரணத்திற்கறிவரியார்சோணசலத்திற்சுகங்கடமைக்... ............. *
கல்லாலெறிந்தபகைக்குவழிகாட்டார்தொழிதல்கண்டாயே.................... *
கொல்லாவம்புஞ்சமர்க்களத்திற்குனியாவில்லுங்கொண்டுநிற்கும் .........*
புல்லாடவனேயெமக்குறுதிபுகன்றூரொங்கேயகன்றூரோ ..................(௰௯)

(பிரிவுவிலக்கல்-அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்)

ஆரும்விரும்பியகல்விமேலாசையுமக்குளதாயிடிற் ·· ........................*
பாருறவென்பொருபாவையாப்பாடியபாவலர்போலவே ........................*
நீருமருந்தமிழ்செப்பிடுநீர்மையநிந்திவணேகுவீர்........................ *
மேருநெடுஞ்சிலையத்தனர்விறருணைபுரிவெற்பரோ .................(௨௰)

(காலம்-மடக்கு- எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்)

வெற்றிமதன்போர்க்காயவம்பிறைக்குங்காலம்- வெங்கனலேபோற்காயவ
ம்பிறைக்குங்காலம், சுற்றுமிருகாமென்னே சங்கணியாக்காலம் - தலைவர்து
றைமறந்தென்னே சங்கணியாக்காலம், கற்றைநெடுஞ்சடைமுடியாடியா
ர்மேன்முழுதுங்- கருணைநாட்டம்புரியுமருணைநாட்டுறையும்,பெற்றவி
ளந்தென்றன் மறுகிடத்தியங்குங்காலம்- பேதையேன்சிந்தைமறுகிடத்தி
யங்குங்காலம்... ... ... ... ... ... ... ... .. ... ... ... ... ... ... (௨௧)

(அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்)

காவிற்றுலங்குநகத்தாலுங்கையிற்பொலிகூர்நகத்தாலும் ... ... .. ... *
இலத்தரக்கனுரங்கொண்டீர்திசைமாமுகனைச்சிரங்கொண்டீர் ... ... ... *
மேலைப்புரத்தைநகைத்தெரித்தீர்வில்வேள்புரத்தைப்பகைத்தெரித்தீர் *
சூலப்படையேன்மழுப்படையேன்சுமந்தீரருணையமர்ந்தீரோ ... (௨௨)

(மாலையிரத்தல்-மடக்கு-அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

அமர்ந்தருணைப்பதிவாழ்விரோ, அன்பர்களன்பினில்வாழ்விரோ... ... ... *
சுமந்தோளிர்சூலமேடுப்பீரோ, தோளணிமாலைகொடுப்பீரோ .. ... ... *
இமந்தருவெண்மதிகாயாதே,யிருகணெடும்புனல்பாயாதே ...... ... *
சுமழ்ந்தகுழற்கொடிவாடாதே, கங்குலுமிப்படிநீடாதே ... ... (௨௩)

(ஒன்பதின்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

நீடாழிஞாலம்வானொடுநீகானுலாவும்யாவையுநீறுயகாலமாய்விடுநாள் *
கோடாழிமால்பிதாமகனாருங்கோடிவீழ்தலைகோடீரபாரமீதுறவே *
சூடாதமாலைசூடுவர்தோளொடுதாளைவீசுவர்சோணசைலேசர்சோபனமா *
ஆடாதவாடலாடுவர்பாடாதபாடல்பாடுவராராதவோசைகூருவரோ... (உச)

(புன்னாகங்கண்டிரங்கல்-கலித்துறை.)

கூத்தாடுமருணேசர்வரையன்பர்பொருளன்புகொண்டுன்னையும் ... .. *
நீத்தார்கொனிழலாருமிலையாகிநின்றாய்நெடுங்காலமே ... ... ... ... *
பார்த்தாலுமயலேகிளைத்தாய்சலித்தாய்பசுந்தென்றலால்... ... ... ... *
பூத்தாய்பொன்னிறமாகவென்னாகமேயன்னபுன்னாகமே ... ... (உரு)

(இரங்கல்-மடக்கு-அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்)

நாகமெடுத்தவரம்பானார், நாலுமறைக்குவரம்பானார் ... ... ... ... ... *
தோகையிடத்தவர்சேனாராய், சோணகிரிப்பதிவானாராய் ... ... .. ... *
மாகமடுத்தவிளங்காவே, மன்னவரொண்ணம்விளங்காவே ... ... .. ... ... *
கோகனகத்திமிருந்தேனே, கொண்கனைவிட்டுமிருந்தேனே ... ...(உசா)

(ஊசல்-மடக்கு-எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

இருசரணச்சிலம்பாடவாடீரூசல், இளமுலைப்பொற்சிலம்பாடவாடீரூசல்
மருவுகலைமருங்கசையவாடீரூசல், வார்வளைக்கைமருங்கசையவாடீரூசல் [ப்
அருமறைநகலவவிடுதற்கரிதாமைய ரருணகிரிப்பரமர்புகழடைவேபாடி
பொருமிருகட்கயலுலவவாடீரூசல், புயமதனன்கயலுலவவாடீரூசல் (உஎ)

(பாங்கிசொல்லுதல்-எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

ஊசலுகைத்திடுவார்குன்றெதிர்கூவிடுவாரொண்டானங்கொணருவார்தண்டலை
கொய்திடுவார்,— ஆசில்புனற்குடைவாரம்மனைபந்துகழங் காடிமகிழ்ந்திடு
வார்சோடிமடந்தையரோ,— ஈசர்விடைக்கொடியார் பூசைசெயற்கெளியா
ரோருணைப்பதிசூழ்மேருவினிற்கவணே,— வீசுதினைப்புனமேயாவரொன
த்தெளியேம்வேலர்மனத்திடையேமாலைவிளைத்தவரோ (உஅ)

(மடக்கு-கலிவிருத்தம்.)

மாலையென்பாங்கலத்தாரும், மறைநாலுங்கலத்தாரும் .. ... ... ... ...*
சோலமன்னகலத்தாரும், குறைவில்பரிகலத்தாரும் ... ... ... ... .. ... *
மாலைவில்வேள்சலத்தாரும், மதர்த்தமதாசலத்தாரும் ... ... ... .. ... ... *
மேலகலாச்சலத்தாரும், விளங்கருணாசலத்தாரோ ... .. ... ... ... ...(உகூ)

(தலைவியைப்புகழ்தல்-அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்)

அருணனொளிதனிலுமொளிரருமலைமருந்தாயவமலரதிருங்கழலினார் ... *

மருமலர் விரிந்துநதி பெருகருணையம்பதியின் மருவிய மடந்தை யிடை
யாம்,— ஒருகொடியிலொன்றுகமு கொருபவள மொன்றுகுமி ழொரு
மதியமொன்று பிறைதான்,— இருசிலையிரண்டுகணை யிருபணை யிரண்டு
குழையிருமுலையிரண்டுமலையே ... .. .. ... ..... ... (௫௰)

(எழுதரிதென்றல்-எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்)

மலையாசனத்தர்மலை மயிலாசனத்தரொடுமலையா நிலத்துவருவார்... ... ... *
அலையாசனத்தரொடுமயிர்தாசனத்தர்தொழுமருணசலத்தர்வரையீர்... ... *
முலையானைகட்டியிடைவெளிதேர்நிறுத்திமதிமுகமாயமைத்தருகுலாம். *
இலைவேல்பரப்பிவிழிநெடுமேதாவரமைப்பனினியெழுதேனிருப்புமனமே

(இரங்கல்-சிலேடை-கட்டளைக்கலித்துறை.) (௫௧)

மேலாடை தோற்றணி சங்காழி கைவிட்டு மென்சிலம்பின் ... .. *
காலால் வருந்தி நிலங்கீறுங் கோலத்தைக் கண்டிருந்தும் ... ... ... *
ஆலால முண்டவ ரண்ணாமலையர்த மன்பர்க்கன்றி ... ... ... ... *
மாலா னவர்க்கிரங்கா ரிங்ங னேயொரு வன்கண்ணரோ ... ... (௫௨)

(நேரிசைவெண்பா.)

கண்ணருக்கும் போதருக்குங் காண்பரிதாய்க் கண்பறித்த ... ... *
திண்ணருக்கு நன்றாய்த் தெரிந்ததே- விண்ணருக்குப் ... ... ... *
போற்றுவா ரண்ணார் புரமெரித்தா ரென்பிறவி ... ... ... ... *
மாற்றுவா ரண்ணா மலை ... ... .. ... ... ... ... ... ... (௫௩)

(இரங்கல்-கலிவிருத்தம்.)

அண்ணா மலையத் த ரடற் கிரிமேல் ... ... ... ... ... ... ... *
எண்ணா மலையத் தவரொய் திலரால் ... ... ... .. ... ... ... *
கண்ணா மலையத் தனைநீர்கலுழும் ... .. ... ... ... ... ... *
விண்ணா மலையத் தரும்வெண் மதியே ... ... ... ... ... (௫௪)

(பாங்கன் துணிவு-எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

மதுவாரினிறைந்தகுழன் மடவார்நெருங்கருணைமலைமேன் மருந்தர்வரையில்
முதுநீரில்வந்தவவ ரடையாளமென்றிறைவர் முதலேலமொழிந்தபடியே *
இதுநாகமன்றுமுலை யிதுபூகமன்றுகள மிதுமேகமன்றளகமே .. *
அதுநீலமன்றுவிழி யதுசாபமன்று நுதலதுகோபமன்றதரமே ... (௫௫)

(நாரைவிடுதூது-எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

அருணைவெற்பின ரடலருக்கவு டரிபிளைழக்கவு மாகவே ... .. ... *
திருமிடற்றொரு கருமைவைத்தவர் திருநதிக்கய றேடியே ... ... *
கருதுநெட்டுடலசைவறத்துயில் கபடநித்திரை நாரைகாள் ... ... *

இருகணித்திரா யிலையெனச்சொல விறைவர்பக்கலி லேகுமே ... (௫௬)

(பாங்கிதலைவிக்குரைத்தல்- கட்டளைக்கலித்துறை.)

வகார்புனத்துத் தழையாற்கரியட்ட தென்பமொன்றும் ... ... ... *
போகாதவூர்க்கு வழிதேடுவார்புலிக் கான்முனியும் ... ... ... ... *
நாகாதிபருந் தொழுமருணாசல நாட்டிளந் ... ... ... ... *
தோகாயணங்கனை யாயவர்க்கேது சொலத்தக்கதே ... ... ... (௫௭)

(எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

சொர்க்கமெனு மொருபதவி யிருக்கமாலைத் ... ... ... ... *
துளவணியு மரியபதவியிருக்கமேலை ... ... ... ... ... ... *
நற்கைலை மலையிருக்க நினைத்தோர்க் கெல்லா ... ... ... ... *
நயந்தமுத்தி நகரமொன்றே நல்காநிற்பீர் ... ... ... ... *
பொற்கையினா லுமைவணங்கிப் பரிந்துபூசை... ... ... ... ... *
புரிந்துதவம் புரிந்துதினம் புகழ்வோர்க் கெல்லாம் ... ... *
எற்குலவு புகழருணை யீசனாரோ ... ... ... ... ... ... ... *
யினிதளிக்கும் பதவிதனக் கென்செய்வீரோ ... ... ... ... (௫௮)

(சித்து- எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

வீரத்தை யணிமழுவா ருமையங்காளர் ... ... ... ... ... ... *
விளங்கருணைச் சித்தர்யாம் விளம்பக்கேளா ... ... ... ... *
காரத்தை யெமக்கிடுகஞ் சத்தையேகோ ... ... ... ... ... *
கனகமெனக் காட்டிடுவோங் கரியோருக்குத் ... ... ... ... *
தாரத்தைப்பொன்னாக வமைத்தோந்தம்பீ ... ... ... ... ... *
தாம்பரமும் பொன்னாகச் சமைத்தோமிந்தப் ... ... *
பாரத்தை யாரறிவா ரயனாகத்தைப் ... ... ... ... ... ... *
பசும்பொ னிற மாகவுமே பாவித்தோமே ... ... ... (௫௯)

(இதுவுமது-எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

பாதமெமக் களித்தவரு ணேசனார்க்கின் ... ... ... ... ... *
பச்சிலைபொன் செய்திமையோர் பசிநோய்தீர ... ... ... *
ஓதுகடை மருந்தளித்த சித்தரோம்யா ... ... ... ... ... ... *
மொருபிடிசோ றல்லதுகூ றுண்டோவப்பா ... ... ... ... *
மாதவர்தந் திருவாணை கரிகளெலா ... ... ... ... ... ... *
மாதங்கமாக்குகிற்போமருந்தில்லாதே ... ... ... ... *
ஏதமறநாகமொளித் தாராவாச்செய்வோ ... ... ... ... ... *
யிரும்பையும்பொன் னாகவுநாத் திகைவிப்போமே ... ... (௬௦)

(தலைவியைப்புகழ்தல்-எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

இதழி யந்தொடைய ரருணை யங்கிரியி விரத முந்திவிடு வலவனே ... *
பூதிய டைந்தமறு கினில்வசந்தனது படையெழுந்ததது பகருவேன் *
புதிய கொம்புசிலை வளையி ரண்டருகு பொழியும்வெம்பகழி போராரு *
உதய தந்தமத களிறுடன்கதலி யுபயதண்டுவரு கின்றதே ...... (சுக)

(ஒன்பதின் சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

வனைக்கனக சாபசோண கிரிப்புனித காலகால ... ... ... ... ... *
மதிக்குநெடு மாயர் போலவே ... ... ... ... ... ... *
தனைக்குளினி யாரியாவ ரவர்க்குமுனி லாமனீடு ... ... ... .. *
தழற்சிகரி யாகனீதியோ ... ...... ... ... ... ... ... *
வினைக்கமல வோடையாவர் புரத்தைமுனி யாணமாவர் ... ... ... *
விரித்தகொடி யாவரீதலால் ... ... ... ... ... ... ... *
இரக்குமனை தோறுமேறி நடத்துமெரு தாவர் மேவி ... ... *
யிடத்திலுறை தேவி யாவரோ ... ... ... .... ... (சுஉ)

(கட்டளைக்கலித்துறை.)

ஆனிட பக்கொடி சோணசலனென்று மன்பர்மலர் ... ... ... .. *
தானிட முத்தி தரும்பெரு மானென்றுஞ் சம்புவென்றும் ... ... *
சானிட வேடன்முன் னூனிடவுண்டது கண்டுமொரு ... ... ... *
மானிட மான வனைத்தேவர் செய்வதென் வந்தனையே ... ... ... (சுங)

(களி- எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

தனையிருக்கு மறைதுதிக்கு மருணை நாதன் ... ... ... .. ... *
சரணமலர் புகழ்களியேஞ் சக்ரபூசை ... ... ... ... *
வினையிருக்கு மவர்க்கெளிதோ வரிதானையோ ... ... ... ... *
விதிவசத்தால் விவரமற்ற விதஞ்சொல் வேனே ... ... ... *
பனையிருக்க நெடியகஞ்சா விருக்கவீணே ... .... ... ... .... *
பச்சையா விலைதுயின்றான் பனையன்றேளி ... ... ... *
யனையிருக்கப் பணிதுபின்றான் மதுவாந்தெய்வ ... ... ... *
வாழிவிட்டுப் பாற்கடன்மீ தழுந்தினனே ... ... ... (சுச)

(இதுவுமது- நேரிசைவெண்பா.)

ஆனார் கொடி-யா ரருண புரிக்களியேம் ... ... ... ... ... *
வானூடோனே மதியற்றார்- மேனாளில் ... ... ... ... ... *
கும்மாகஞ் சாவிலையே தாளிடித்துத் தின்றாலும் .. ... ... ... *
தம்மாகஞ் சாவிலையே தான் ... ... ... ... ... ... ... (சுரு)

(பிச்சியார்-எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

தாமணிவர் திரிசூல மெதிர்கண் டார்மேற் ... *
சக்கரத்தை விடுவர்சிவ சமயத் தாவர் ... *
காமுகரை யாண்டுகொளார் சிவநூல் கேட்பர் ... *
கருத்தினின்மா றெரிசனமே காட்டா நிற்பர் ... *
ஆமையர வணிதொடையார் விடையார் வாழும் ... *
அருணகிரி வளநாட்டி லகங்க டோறும் ... *
சேமநிதி யெனவுலவும் பிச்சியார்தந் ... *
திருப்பெயரை வெளியாக்கித் திரிகின்றாரோ ... (௬௬)

(இதுவுமது- மடக்கு-கட்டளைக்கலிப்பா.)

தில்லை மன்று ணடம்புரி பாதனார் ... *
தேவ ராயர் திருவரு ணைக்குளே ... *
முல்லை மல்லிகை சண்பகம் பிச்சியார் ... *
மொய்த்த வார்குழன் மோகனப் பிச்சியார் ... *
நல்ல மேனியும் பொற்றிரு வேடமே ... *
நாடி யிட்டதும் பொற்றிரு வேடமே ... *
இல்லை யாயினு மிவ்விடை யையமே ... *
ஏற்க வந்தது மிவ்விடை யையமே ... (௬௭)

(கார்கண்டு- பாகனொடுசொல்லல்- கட்டளைக்கலித்துறை.)

அயங்காட் டியமறை யார்விடை யாள ரருணைவெற்பில் ... *
புயங்காட் டியமணித் தேர்வல வாமுன்பு போனகொண்டல் ... *
சயங்காட்டிக் கோபமுஞ் சாபமுங் காட்டித் தடித்திடித்துப் ... *
பயங்காட்டி னாலஞ்சு மேதனி யேநின்ற பைங்கொடியே ... (௬௮)

(நேரிசை வெண்பா.)

பைங்கட் புலிக்குப் பரிபவத்தைக் காட்டிநர ... *
சிங்கத் தினையடர்த்துச் சீறியே- வெங்கைப் ... *
புழைக்குஞ் சரமுரித்துப் போர்த்த தருணைக்கே ... *
தழைக்குஞ் சரபமொன்று தான் ... (௬௯)

(குறம்- பதினாற்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

ஒன்றுமூன்று நாமுரைக்க வந்துகேளு மரிவைமீர் ... *
உதயமான சுளகுநெல்லு மொற்றைபட்ட தாதலால் ... *
கன்றுமானு மழுவுமாக வொருவர்வந்து தோன்றினார் ... *
கண்டமட்டி லேகறுப்பர் கைக்கபால ரவனையும் ... *

சென்றுநாடி லருணைமீது காணலாகு நாமமும் ... ... ... ... *
தேவராய ரவாலாது தெய்வம்வேறு கண்டிலேம் ... ... ... *
நின்றுவாடு மிவடனுசை யிடர்தவிர்ப்ப ராதலால் ... ... ... ... *
நீறுகொண்டு மூன்றிரேகை நெற்றிமீதி லெழுதுமே ... ... (௫௰)

(இரங்கல்- இதுவுமது.)

நெற்றிமீது கண்படைத்த வும்மைமார னெய்வனோ ... ... ... *
நீறணிந்த வரவிருக்க நெடியதென்றன் முடுகுமோ ... ... *
வெற்றியான தாளிருக்க மதியமும்மை நலியுமோ ... .. .... ... *
விரவுகங்கு லமதுகண்கள் வெயிலின்முன்பு நிற்குமோ ... ... *
கற்றையான குழலியெந்த வுதவிகொண்டு பகைவெலும் .... .... *
கருணைகூர்தெ னருணைமேவு கலியுகத்து மெய்யரோ ... ... *
செற்றலார்கள் புரமெரித்த புழுகணிப்ர தாபரோ ... .... .... *
தேவராய ரேசுகந்த தினவசந்த ராயரோ .... .... ... .. (௫௧)

(கார்காலம்- அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

நினைப்போது தானே நினைத்தாலு மேலோர் சிறப்பான பேறீகுவோர் *
வனத்தாடு சோணா சலத்தாடுதீரா மயிற்பேடை காளோடைகாள் .... *
வினைப்பாவி யானேனென் விழிப்பாயு நீரான் மிகுத்தேறு கார்காலமே .. *
தனித்தாவி சோர்வார் தமக்கால மேநீள் சரத்கால மேகாலமே ... (௫௨)

(இளவேனில்- நேரிசை யகவற்பா.)

காலையு மாலையுங் கைம்மலர் குவித்து... ... ... ... ... ... *
மாலு மயனும் வணங்குதற் கரியோன் ... .. ... ... ... *
இமைக்கு முனுலக மியாவையும் படைத்தோன் ... ... ... ... *
தனக்கொரு தாயுந் தந்தையு மில்லோன் ... ... ... ... ... *
பழவினைக் கயிற்றிற் பல்லுயிர்ப் பாவை .. ... ... ... .. *
அழகுற நடிக்கத் திருநடம் புரிவோன் ... ... ... ... ... *
வினைவலை யறுக்கு மெய்த்தவ வேடன் ... ... ... ... *
மனவலைப் பிணிக்கு மான்மத நாதன் ... ... ... ... ... *
பேறு மறுபத் தாறா யிரம்பொன் ... ... ... ... ... *
மாறாத் தியாக வசந்த விநோதன் ... ... .. .. ... *
அண்ணா மலைய னதிருங் கழலன் ... ... ... ... ... *
கண்ணா ரமுதன் கைலைப் பொருப்பின் ... ... ... ... *
மறலித் திசையின் மலயா சலமென ... ... ... ... ... *
இருத்திய துருத்திகொண் டிளங்கால் பரப்பிக் ... ... ... ... ... *

காவுலைப் பல்லவக் கனனு வசைப்பக் ... ... ... ... ... ... *
குறைவறு குயில்வாய்க் குறட்டினி லடக்கிப் ... ... ... ... ... *
பொறிதிக ழரிக்கரி யதனிடைச் சொரிந்துள் ... ... ... ... *
இசைத்திடு மஞ்சரிப் பசைக்கோ லசைத்து ... ... ... ... ... *
மதவி ரனுக்கு வசந்தக் கருமான் ... ... ... ... ... ... *
பனிமலர்ச் சாயகம் பண்ணி நீட்டினன் ... ... ... ... ... *
இன்னமும் வந்திலர் கேள்வர் ... ... ... ... ... ... ... *
புன்னையங் கருங்குழ லன்னமென் னடையே ... ... ... ... (௫௩)

(மடக்கு- எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

அன்னியமா சடையாரும் பின்னியமா சடையாரும் ... ... ... *
அடிமாற நடித்தாரும் முடிமாற னடித்தாரும் ... ... ... *
உன்னுமற மொழிந்தாரும் பின்னுமற மொழிந்தாரும் ... ... ... *
உகைத்திடுமா னேற்றாரும் மிகைத்திடுமா னேற்றாரும் ... ... *
என்னகத்தா முறியாரும் கைந்நகத்தா முறியாரும் ... ... ... *
எருக்கிதழி மணத்தாரும் முருக்கிதழி மணத்தாரும் ... ... *
வன்னிவடி வனத்தாரும் சென்னிவடி வனத்தாரும் ... ... ... *
வருகருணைப் பதியாரும் பெருகருணைப் பதியாரோ .. ... (௫௪)

(சம்பிரதம்- எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

பரவைபொருக் கெழவுங் ககனம் வடுப்படவும் ... ... ... ... *
பரிதிவடக் கெழவு நிருதிகுணக் குறவும் ... ... ... ... ... *
இரவுபகற் படவும் பகலிர வொத் திடவும் ... ... ... ... ... *
எளிதினியற் றிடுவோ மிவைசிலவித் தைகளோ ... ... ... *
அரவமணிப் பணியா னனலகிரிப் பெருமான் ... ... ... ... ... *
அருணகிரிக் கிணையா வவனிதலத் திடையே ... ... ... *
கருதிமனத் தினிலே சிறிது நினைத் தளவே ... ... ... ... ... *
கதியையளித் திடுமோர் பதியுமுணர்த் துவமே ... ... (௫௫)

(கருணைச்சிறப்பு- நேரிசைவெண்பா.)

உள்ளத்தின் ஞான முயர்ந்தவிடத் தன்றியிருட் ... ... ... ... *
பள்ளத்தி லென்றும் படராதே- வள்ளல் ... ... ... ... ... ... *
அருணா சலப்பெருமா னம்பிகையோர் பாகன் ... ... ... ... *
கருணா சலமாங் கடல் ... ... ... ... ... ... ... ... (௫௬)

(பாண்- அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

கங்கை வார்சடைப் பரமர்தென் னருணையிற் கடைதொறு நீபாட .. *

அங்கை யாவிருசெவி புதைத்தேத்துவோ மருச்சுனன் திருநாமம் .... *
எங்கை மார்செவி பொறுக்குநின் னிசையெனு மிடிக்குரன் மகிழ்வாரார் *
ழங்கை மார்செய லறிந்துகொள் பாணனேமயிலெனப் புகழ்வாயே.(௫௭)

(தலைவியைப்புகழ்தல்- அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

புடைசெறிந் தளிபாடு மிதழியந் தொடை மார்பர் புலிபதஞ்சலி நாடுவார்
மடையிளங் கயருவு மருணையங்கிரிமீது மலரணங் கெனமேவுவார் ... *
நடையுமிந் திரவேழ மிருகையிந் திரதாரு நயனமிந் திரநீலமே ... *
இடையுமிந் திரசால நுதலுமிந் திரசாப மிதழுமிந் திரகோபமே. (௫௮)

(உருவெளி-கலிவிருத்தம்.)

இந்திர கோபமா மிதழி பாகனார் ... ... ... ... ... ...... *
செந்தமி ழருணைநந் தேருஞ் செல்லுமே ... .. ... ... ... *
சந்திர ரேகையுஞ் சமர வாளியும் ... ... ... ... ... ... *
மந்தர மேருவும் வளைந்து கொண்டவே ... ... ... ...(௫௯)

(தலைவியைவியத்தல்-எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

கொண்டலணி கண்டர் நிறை கங்கையணி செஞ்சடையர் ... ... ... *
கொம்ப ரொரு பங்கி னுறைவார் ... ... ... ... ... ... *
அண்டபகி ரண்டமளா வக்கியென நின்றவதி ... ... ... ... ... ... *
ருங்கழலர் தங்கருணை யீர் ... ... ... ... ... *
கண்டுளது கொண்டன் மிசை திங்களெழு கின்றதிது ... ... ... ... *
கண்டதிலை யுங்கண் முகமா ... ... ... ... ... ... ... *
மண்டலமெனும் புதிய திங்கண் மிசை கொந்தளக ... ... ... ... *
மஞ்சுகுடி கொண்ட வடைவே ... ... ... ... ... ... (௬௰)

(நேரிசை வெண்பா.)

அடுத்தமதிச் சென்னியின்மே லம்பிருக்கு மற்றோர் ... .. ... ... *
இடத்திலே நாரியிருக்கும்- தடக்கையிலே ... ... ... ... ... *
எந்துசிலை விட்டிருக்கு மெம்மருணை நாதனார் ... ... ... .. ... *
போந்து புரமெரித்த போது ... ... .. ... ... ... ... (௬௧)

(கார்காலம்- கலித்துறை.)

போதற்கு மரிதான வருணாச லத்தீசர் பொன்மேருவாய் ... ... ... *
ஏதப்ப டும்பாவி மனமேபி ரிந்தாரி தென்னார் கொலோ ... ... *
ஓதத்தி னீரோடு கனலுண்டு புயன்மீள வுமிழ் தன்மைபோல்... ... *
காதற்குண் மடவார்மெய் பொன்பூக்க மின்வீசு கார்காலமே ... (௬௨)

(தலைவியைவேண்டல்- கொச்சகக்கலிப்பா.)

கார்வந்தா லன்னகறைக் கண்டனார் செங்கதிரோன் ... ... ... *
தேர்வந்தா லும்பொழில்சூழ் தென்னருணை நன்னாட்டில் ... ... ... *
ஆர்வந்தா லுந்தணியா தன்மனனீ ரானாலும் ... ... ... ... *
நீர்வந்தா லாசை நெருப்பவியுங் காணுமே ... ... ... ... (௩௩)

(பனிக்காலம்- கலித்துறை.)

காணம்ப ரந்தோலி னுடையாள ரருணேசர் கைலாசமேல் ... ... *
தூணங்க ணிகர்தோள ருறைகின்ற நகரூடு சொரியாதரோ ... ... *
பூணங்கை வளைசிந்த மடவார் மனத்தேறு புகைபோலவேள் ... ... *
யாணங்க ளுதர்கின்ற துகள்போல வுறைசால் பனிக்காலமே ... (௩௪)

(நேரிசை- வெண்பா.)

பண்ணிறந்த வாசவரிற் பலகோடி மாண்டாலும் ... ... ... ... *
எண்ணிறந்த வேத ரிறந்தாலும்- கண்ணற் ... ... ... ... *
கிமைத்தவெலா மாண்டாலு மண்ணா மலையார்க் ... ... ... ... *
கிமைப் பளவுங் காலமிலை ... ... ... ... ... ... ... ... (௩௫)

(தலைவனைவேண்டல்- ஒன்பதின்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

இல்கொளி பரந்து மாரன் விடுகணை துரந்துதாடி ... ... *
யிடுமிரு நெடுங்கண் மாதரார் ... ... ... ... *
விலகரிய கொங்கைமீது பழநழுவி வந்து பாலின் ... *
விழுவ தெனவந்து சேர்கிலீர்... ... ... ... ... *
மலகரி குறிஞ்சிதேசி வைரவி சுரும்புபாடும் ... ... *
வயலருணை மங்கை பாகரோ ... ... ... ... *
பலமலர் கதம்பதூளி ம்ருகமத சுகந்தம்வீசும் ... ... ... *
பரிமள வசந்த ராசரோ ... ... ... ... ... (௩௬)

(மதங்கு- ஒன்பதின் சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

வசிகரம் வடங்கு நீறு மபிநய புசங்கராச ... ... ... ... *
வலயமு மணிந்த தோளினர் ... ... ... ... *
அசல குலமங்கை பாகர் பரிமள வசந்த ராச ... ... ... *
ரருணையின் வளங்கள் பாடியே ... ... ... ... *
இசைபெற வரங்கி னூடு பவுரி கொண மதங்கி யார்த ... ... ... *
மிலகிவளர் கொங்கை யானையே ... ... ... ... ... *
திசைபெற விருந்த யானை பிறகிட முனிந்து போர்செய் ... ... *
திறலிப மனந்த மானவே ... ... ... ... (௩௭)

(இதுவுமது-மடக்கு-கட்டளைக்கலிப்பா.)

நதியைச் சூடதி ருங்கழ ணாதனர், நம்ப ணாருரு ணாபுரி வீதிமேல் ... *
சதியிற் பாடி நடிக்கு மதங்கியார், தந்த வாசை தரிக்கு மதங்கியார் ... *
வதனத் தாற்சசி மண்டல மாறுமே, வந்தி ருந்தவிம் மண்டல மாறுமே *
கதியிற் கொண்டது மந்தக் கரணமே, கண்ட பேர்க்கிலை யந்தக் கரணமே.

(குறம்-எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.) (௬௮)

அருணமணி முலைக்கிரிமேற் செங்கை வைத்தா ... ... ... ... *
யாகையா லருணைகிரி யன்பன் மூதூர் ... ... ... ... ... *
வருணமுலை கண்ணாரப் பார்த்தா யுன்றன் ... ... ... ... ... *
மகிழ்ந னுங்கண் ணாமுதன் வந்து கேளாய் ... ... ... *
தரணியிலுன் றனைச்சேர்வன் முருகன் போலத் ... ... ... *
தனையனாயும் பெறுவையிவை தப்பு மாயின் ... ... ... ... *
திருநிறைவண் டார்குழலாய் குறமும் பாடேன் ... ... ... ... *
சிறந்தகுறக் கூடையும் யான் றீண்டிலேனே ... ... (௬௯)

(மறம்-இதுவுமது.)

தீண்டரிய மடற்பனையின் சுருளை வாரிச் ..... ... ... ... ... *
சிற்றிரும்பாற் சுற்றிவரச் செருக்கிக் கூட்டி ... ... ... ... *
நீண்டதுவுஞ் சுருண்டதுமா வளைந்து சுற்றி ... ... ... ... ... *
நிருபமெனக் கொடுத்தெதிரே நிற்குந் தூதா ... ... ... ... *
தாண்டவமா டும்பரனா ரருணை நாட்டிற் ... ... ... ... ... *
றருமறப்பெண் டனைவேண்டிச் சமரிற் போந்து ... ... ... *
மாண்டவரோ நியகோனல் வளைகளுங்கள் ... ... ... ... ... ... *
வருங்கல்வழி வாயினடு மரங்கடாமே ... ... ... ... (௭௰)

(மடக்கு-கலிவிருத்தம்.)

மறைக்கவனப் பரியாரும், வரைக்கவனப் பரியாரும் ... ... ... *
எறித்தவிரும் பிறையாரும், எவரும்விரும் பிறையாரும் ... ... ... *
பொறுத்தசின விடையாரும், பொருந்துசின விடையாரும் ... ... *
அறத்தவளம் பதியாரும், அருணைவளம் பதியாரோ ... ... ... (௭௧)

(கலித்துறை.)

ஆரணி துங்க னாரணி பங்க னருணேசன் ... ... ... ... ... ... *
தாரணி யஞ்சுங் காரண நஞ்சந் தரியானேல் ... ... ... ... ... *

வாரண ரெங்கே சாரண ரெங்கே மலர்மேவும்
பூரண ரெங்கே நாரண ரெங்கே போவாரோ (எஉ)

(தழை- கட்டளைக்கலிப்பா.)

போர்த்த போதக நல்லுரி யாடையார்
 போர்வை யாளர் புகழருணைக்குளே
ஈந்த சூத நறுந்தழை யையனே
 எங்கண் மாத ரொடுத்து மகிழ்ச்சியாய்...
மோந்த போது துவண்டது மெய்யிலே
 மொய்த்த போது புலர்ந்தது கண்ணினீர்ப்
பாய்ந்த போது நனைந்தது மீளவும்
 பார்த்த போது பசந்து மலர்ந்ததே (எங)

(இரங்கல்-மடக்கு- எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

மலர்தழித்தொடைபான், மதியணி வித்தகனூர்
 மலைமகளற்புதனூர், வயலருணைப்பதிசூழ்
குலவுமிடக்கழியே, பலவுமிடச்கழியே
 குறவையினக்கயலே, யுறவுமெனக்கயலே
சுலமிகு முற்பலமே, தளர்வது முற்பலமே
 சருவுமனத்திடரோ, தழுவுமனத்திடரோ
இலைநெரி சற்பனையே, யிவருனை சற்பனையே
 யினியபனித்திரையே, யினியிலை நித்திரையே (எச)

(சுவடுகண்டிரங்கல்-எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

நித்தனம்பனருணைசலத்திருவை நின்று தேடியுழனெஞ்சமே
இத்தடஞ்சுரமடங்க வோவிதல தில்லை வேறுமரமிதனிடை
அத்தி நின்றவிடமவ்விடஞ் சிலைகொளரசு நின்றவிட மூவ்விடம்
எய்த் துளஞ்சியிள வஞ்சி நின்றவிட மிவ்விடஞ்சுவடு மேவுமே. (எரு)

(மடல்விலக்கு-கலிவிருத்தம்.)

ஏறுடையண்ணலாரேழை பாகனூர்
ஆறணி சென்னியாரருணை வெற்பரோ
கூறொரு பெண்ணையே கூடவேண்டுவார்
வேறொரு பெண்ணையே வெட்டுவார்கொலோ... (எசா)

(தவம்- எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

வாய்ந்தநல மருந்தருந்தி யரிய யோக ... ... ... ... ... ... *
வகைபுரிந்து வாயுவுள் ளேயடக்கி னாலும் ... ... ... ... ... *
கூய்ந்தவிருப் பூசியிலே தவஞ்செய் தாலும் ... ... ... ... ... *
காயம்வருந் திடுவதல்லாற் கதிவே றுண்டோ ... ... ... *
ஆய்ந்ததிரு நீறணிந்தைந் தெழுத்தை யோதி ... ... ... ... ... *
யகமகிழ்ந்து சிவாகமத்தி னடைவை யோர்ந்தே ... ... ... *
ஏய்ந்தருணா சலத்தைவலங் கொண்டா ரன்றே ... ... ... ... ... *
விமைக்கு முன்னே கைலைமலை யிலங்கொண்டாரே ... ... (௭௭)

(மாலையிரத்தல்- அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

இலங்கிய திங்க ளெழுந்தா லெங்கன்மின் வெங்கதி ரென்பாள் ... *
கலங்கின ளாயினு மன்னாள் கட்கம லங்குவி யாவோ ... ... ... *
துலங்கிய வெங்கதிர் தானே சோணகிரிப்பெரு மானே ... ... *
அலங்கலை யென்று கொடுப்பா யன்றது வெண்மதி யாமே ... (௭௮)

(நேரிசைவெண்பா.)

ஆற்றுங்காற் கஞ்சத் தவர்தா மரைக்கண்ணர் ... ... ... ... *
சாற்றுங்காற் கண்ணரவர் தந்தையார்- கீற்றுமதி ... ... ... ... *
சூடும் பெருமானைச் சோணகிரி வித்தகனைத் ... ... ... ... ... *
தேடுவதிங் கெப்படியோ சேர்ந்து ... ... ... ... ... ... (௭௯)

(கட்டளைக்கலித்துறை.)

சேணார் திருவுடைச் செல்வனைக் காணிற் சிறப்புச் செய்து ... ... *
பேணா தவருமுன் போபுவி மீதிற் பெருத் தெழுந்து ... ... ... *
சோணா சலவடி வாய்வெளி யாய்நின்ற சோதிதனைக் ... ... ... *
காணாத கண்ணனைச் சொல்வர்செந் தாமரைக் கண்ணனென்றே ... (௮௰)

(தவம்-நேரிசைவெண்பா.)

என்றுமதிக் கண்ணா ரிறைவரரு ணாபுரியில் ... ... ... ... ... *
நின்று தவம்புரியாய் நெஞ்சமே - பொன்றிரளான் ... ... ... *
மாதரையா னாயிழைசூழ் மாதரையா னீதுவண்டு ... ... ... ... *
மாதரையா னாமை யென்சொல்வாய் ... ... ... ... ... ... (௮௧)

(இடைச்சியார்- எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

சொல்லாடி னுமக்கிரண்டு பசுவே யுண்டு ... ... ... ... ... *
சுமந்திடுபோற் கலசமுழத் துணையாமீதும் ... ... ... ... *

அல்லாம விடையின்மிக விளைத்துப் போனீ ... ... ... ... *
ராயிருந்து மிடைமதிபோ வகந்தை தானே ... ... ... ... *
புல்லாரொன் பணிதொடையா ரருணை நாட்டிற் ... ... ... ... *
பொதுவர்குல மங்கையரோ புவிமேற் கண்டோம் ... ... ... *
எல்லாருந் தனித்தனியே டெடுத்தக் காலு ... ... ... ... ... *
மிரண்டுமுறை யாமலகன் றேகுவிரோ ... ... ... ... (௮௨)

(இதுவுமது- கட்டளைக்கலித்துறை.)

வீரனை நல்கி மகமூறு செய்த விடைக்கொடியார் ... ... ... ... *
காரணி கண்ட ரருணா சலத்திற் கலசங்கொண்டு ... ... ... ... *
மோது கூறு மிடையின மானுக்கு முண்டகம்போல் ... ... ... *
ஈரடி மெல்லினம் வல்லின மாகு மிருதனமே ... ... ... ... (௮௩)

(தலைவி யிளமை யுணர்த்தல்.)

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

தடணாக மணிவெயிலும் பிறையுமிழு நிலவுமெதிர் சடிலநாதன் ... ... *
அடணாக நெடுஞ்சிலைபா ணசுரர்புர மெரித்தபிரா னருணை நாட்டில் ... *
இடணாக மனையவரோ தனஞ்சிறிதுங் காணாதசிறியார் தம்மைக் ... ... *
கடணாக நீர்வினவிப் பிணைதேடி முறிதனையேன் கைக்கொண்டீரோ. (௮௪)

(அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

கையடைந்த மழுமானுஞ் செழுமானு முழைமானுங் கயலுமானும் *
மையடைந்த விழிமானு முடனாக வருணேசர் வருகுவாரோ ... ... *
மெய்யடைந்த திறங்கருகி விழிகளும்பாஞ் சடைந்துவர மிடற்றினோடே *
ஐயடைந்து படர்ந்துவர யமனடர்ந்து தொடர்ந்துவரு மன்றுதானே. ௮௫

(தலைவன்சொல்லல்- நேரிசைவெண்பா.)

அண்ணா மலையா ரருணையனை யிரும்மைக் ... ... ... ... ... ... *
கண்ணாலஞ் செய்தான் கமலத்தோன்- எண்ணா ... ... ... ... *
திணைக்கோலஞ் செய்தமுலை யேந்திழையி னென்னை ... ... ... *
மணக்கோலஞ் செய்தான் மதன் ... ... ... ... ... (௮௬)

(கொற்றியார்- அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

மழலைமொழி யிசையாலுங் கொடும்பார்வை யதனாலு மயக்க மாக்கிச் *
சுழலும்விட ரரவமெலாம் படமெடுத்து முன்னாடத் தோன்றினீரோ *
அழலுருவ மணிகரத்த ரருணகிரி வளநாட்டி லளிவந் தாதும் ... ... *
குழலொருசற் றுண்டாயி னெப்படியோ வாட்டிடுவீர் கொற்றியாரோ. *

(இதுவுமது- கொச்சகக்கலிப்பா.)

ஆரிதழி சூடு மருணேசர் நன்னாட்டில் ... ... ... ... ... *
வாரிறுகு கொங்கை மலைசுமக்குங் கொற்றீரோ ... ... ... ... *
யேரிருள் போய் நாமப் பிறைநிலவு கண்டொளிக்கக் ... ... ... *
கூரியகண் ணில்லார் குழல்குறைந்தா ரென்பாரோ ... ... ... (அஅ)

வஞ்சித் துறை.
பாணார்மொழிதிறை ... ... ... ... ... *
சோணசலரடி ... ... ... ... ... ... ... *
பேணதவனாறு ... ... ... ... ... ... ... *
மாணாரகமே ... ..... ... ... ... ... (அக)

வஞ்சிவிருத்தம்.
நாக வாதையில் வன்பிறார் ... ... ... ... *
தரணிமீதொரு கொன்பெறார் ... ... ... ... *
சூருலோகமு மின்புறார் ... ... ... ... ... *
அருணைநாயக ரன்பறார் ... ... ... ... ... ... ... (கூய)

(வேற்றொலி- வெண்டுறை.)

அருணை யதிருங்கழல ராறணிசெஞ் சடையாள ரிவைபாகர் ... ... *
கருணை நெடுங்கடலான பெருமானார் தாடொழுதார் கதியைநாடின் *
மரணமிலா விமைய்வர்தம் வானுலக மன்றே ... ... ... ... *
பொரு ணிறையு நான்மறையோர் புகலுமத் தாட்பூவே .. ... (கூக)

(இரங்கல்- கலித்துறை.)

பூவுண்ட விடையாள ரருணசலத்தீசர் பொன் மேருவாய் ... ... *
பாவுண்ட புகழாளர் பிரியே னெனச்சொன்ன பருவத்திலே ... ... ... *
காவுண்டு குயிலுண்டு மயிலுண்டு கிளியுண்டு கனிதாவுதே ... ... *
மாவுண்டு குருகுண்டு திருகுண்ட மனனுண்டு மறவாமலே ... (கூஉ)

(வெறிவிலக்கு- கலிவிருத்தம்.)

வங்குவில் லேர் நுதல் வயங்கு மாதரீர் ... ... ... ... ... ... *
ஈங்கிவ ளொருவர்கை யேட்டை வாங்கினல் ... ... ... ... ... *
ஆங்கடு வணிந்தவ ரருணை நாட்டிலே ... ... ... ... ... *
நீங்கண்மை யழிப்பது நீதியல்லவே ... ... ... ... ... (கூா)

(தலைவியைப்புகழ்தல்-கட்டளைக்கலித்துறை.)

அள்ளற் கடல்விட நீங்கா தகண்ட ரருணை வெற்பிற் ... ... *
பிள்ளைப் பிறையுஞ் சிலையுமொப் பாநுதற் பேதை நல்லாள் ... *
வள்ளற் குழையொரு கண்ணுக்குத் தோற்றம்பும் வாரிதியுங் ... *
கள்ளக்கயலு மிராசியின் மீனுங் கடைப் பட்டதே ... ... ... (கூச)

(வலைச்சியார் - அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

தேவியிட மகலாத வருணகிரி வளநாட்டிற் றெருக்கடோறு .. *
மாவிரத முனிவரெலா மயல்கூரக் கயல்கூறும் வலைச்சியாரோ ... ... *
காவிதிகழ் வாவியிலே மீன்பிடித் துவருவோரைக் கண்டோங் கண்டோர் *
ஆவியெலாம்பிடித்திழுக்குமமைப்போல வொருவரைக்கண் டறிந்திலோ
(இதுவுமது-நேரிசைவெண்பா.) [மே. (௯௫)

மேலா றணிசடையார் வீறருணை வீதியிலே ... ... .. ... ... *
மாலாகவந்த வலைச்சியரோ- காலா ... ... ... ... ... ... ... *
லிருவராலுங் காட்டும் யான்பிடிக்கக் காத ... ... ... ... ... *
லொருவ ராலுந் தீருமோ ... ... ... ... ... ... ... (௯௬)

(செவிலி நற்றாயைத்தேற்றல்-எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்)

ஒருவரா லுமணுகாத நாளிலே வுயிரினுன வொருகேள்வ னுசையான் ... *
மருவினாலு மெனதாகு நாளையே வழிகடோறு மினிநாடி மீளவே ... *
கருணைநீதி மனைபேணு மாதுடன் கடல்களேழு மலையேழு மேழுமா *
வருணர்சூழு முலகேழு மேழுமா வருணைநாதர் சரபாவ தாரமே. (௯௭)

(வண்டோச்சி மருங்கணைதல்- அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

தாரிலங்கு மறைமுடிவி னடித்தருளு மருணேசர் தமதுநாட்டில் ... *
நாரியர்மேன் மனமகிழு மளியினங்கா ளொருவார்த்தை நவிலக்கேளீர் *
ஏரிருக்கும் கைதையெலாஞ் சோறிருக்க நீரிருக்கு மிடங்கடோறும் *
வேரிமலர்த்தேனிருக்கவிவர்கூழை விரும்பிவந்தேன் விழுகின்றீரோ (௯௮)

(தலைவி யவயவ வருமைசொல்லல்- அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்)

ஏமநெடுஞ் சிலைவளைத்த பெருமானு ரருணகிரி யிறைவர் நாட்டிற் .. .. *
றமனைமன் டபத்துறையு மடந்தையிடை யெழுதவென்றாற் றலைவனுரோ *
மாமுயற்கொம் பினிலேறி விசும்பலரைப் பறித்துமுனம் வடிவிலாதோன்
ஆமைமயிர்க் கயிறுகொடு தொடுத்தணிந்த புதுமையினு மருமையாமே.

(தலைவிகையுறை யேற்றமைசொல்லல்- கட்டளைக்கலிப்பா.)

ஆர்வலர்க்கரி யாவர நல்குவா ரத்தனாரரு ணாபுரி வெற்பரோ........ .. *
பார்வியப்புற நீர்தரு மாமணி பட்டபாடு பகர்ந்திட லாகுமோ........*
கார்குழற்கு முடிமணி யாயிரு கண்கண் மீதுறு கண்மணி யாய்முலை ... *
சேர்தலுற்ற பொழுதிரு குன்றிலுஞ் சென்றுலாவுந் தினமணியானதே. ௱

திருவருணைக்கலம்பகம் - முற்றிற்று.

உ

குருபாதம்துணை.

வித்வான் - காஞ்சீபுரம்.

சபாபதிமுதலியாரவர்கள்பேரில்

# சரமகவிதை.



நேரிசைவெண்பா.

மன்னிநின்றவாணி மலரோனிடத்துமணி
பொன்னிகந்துவேற்றுலோ கம்பொருந்தித்— துன்னுதலாம்
உள்ளமகலா துறைகாஞ்சிமேவுதமிழ்
வள்ளல்சபாபதிமால் வாய்.

கட்டளைக்கலித்துறை.

தாற்றுக்கிருக்கை வனஞ்சூழுங்கச்சிச் சபாபதிமால்
வீற்றுக்கிருக்கை மறைந்தபின்போகம் வெறுக்கைவண்மை
சோற்றுக்கிருக்கையுங் காண்போமவிச்சை தொலைக்குங்கல்விப்
பேற்றுக்கிருக்கை யினியெங்குக்கண்டு பிடிப்பதுவே.

இவை

ஷை முதலியாரது மாணக்கர்

புரசை. அஷ்டாவதானம்

சபாபதிமுதலியார் இயற்றியவை.